ஸ்ரீ:.

பிள்ளையுலகாசிரியர் திருவடிகளேசரணம்.

அழகியமணவாளப்பெருமாள்நாயனர் திருவடிகளேசரணம்.

ஜீயர் திருவடிகளேசரணம்.



பெருமாள்கோயில்

பிரதிவாதிபயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி தொகுத்த

# ஆசார்யஹ்ருதய ஸாரம்.

[ஆசார்யஹ்ருதய மூலத்துடன் கூடியது.]



சென்னை:

"ஹாடன் அண்டு கம்பேனியில்" அச்சிடப்பட்டது.

ஸ்ரீமுகஸம் விஜயதசமி.

1933

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானர் ஜீயர் திருவடிகளே சரணம்.

# ஆசார்யஹ்ருதயத் தனியன்கள்.

[ஸ்ரீஶைலேஶேத்யாதி — ப்ரணதோஸ்மி நித்யம் ||]

க்ருவாயுஷ்டாநுவக்தார ஶஹிராஶவராஹியம் |
ஸ்ரீக்ருஷ்ணதநயம் வந்தே ஜகத்குருவராநுஜம் ||

த்ராவிடாம்நாயஹ்ருதயம் குருபர்வக்ரமாகதம் |
ரம்யஜாமாத்ருதேவேந தர்ஶிதம் க்ருஷ்ணஸூநுநா ||

பணவாளரவணைப் பள்ளிபயில்பவற் கெவ்வுயிரும்
குணபோகமென்று குருகைக்கதிப னுரைத்ததுய்ய
உணர்பாவினுட்பொரு ளொன்றுமறியா வுலகறிய
மணவாளன் மாறன்மனமுரைத்தான் வண்முடும்பைவந்தே.

மாதவத்தோன் மாறன்மனங்கூறும் மணவாளன்
தோதவத்தித்தூய்மறையோரான பெற்றூர் — நீதியினல்
ஆங்கவர்தாள் சேர் பெற்றூராயி மணவாளமுனி
பூங்கமலத்தாள்கள் நெஞ்சே போற்று.

அழகியமணவாளப்பெருமாள்நாயனர் திருவடிகளே சரணம்,

ஜீயர் திருவடிகளே சரணம்,

ஸ்ரீ:





# ஆசார்யஹ்ருதயஸாரத்தின் — அவதாரிகை.

ஆத்மாக்களனைவரும் நித்யஸூரிகளைப்போலே மலர்ந்த ஞானத்தையுடையராய் எம்பெருமானுக்கு * ஒழிவில்காலமெல்லா முடனாய்மன்னி வழுவிலா வடிமைசெய்து * பேரின்பவெள்ளத்தில் மூழ்கியிருக்கவேண்டிய யோக்யதைக்கு இட்டுப் பிறந்துவைத்தும் அநாதியான மாயையினாலே மறைக்கப்பட்டவர்களாய் அவித்யையினாலே நேர்ந்த புண்ய பாப ரூப கருமங்களுக்கு ஏற்பப் பலவகைப்பட்ட யோனிகளில் மாறிமாறிப் பிறந்து வருந்திக்கிடக்க, அவர்கள் நல்வழிதெரிந்து உஜ்ஜீவிக்கும்பொருட்டு எம்பெருமான் தானே பல அவதாரங்கள் செய்தருளியும் வேதம் ஸ்மிருதி இதிஹாஸம் புராணம் முதலிய பல சாஸ்திரங்களை உபகரித்தருளியும் ஸம்ஸாரிகள் திருந்தக் காணாமையாலே அவர்களுக்கு ஸஜாதீயர்களாயிருப்பாரைக் கொண்டே திருத்தவேணுமென்று பார்த்து அதற்கு உரிய ஒருவரை உண்டாக்கவேணுமென்று கருதித் தன்னுடைய நிர்ஹேதுக ப்ரஸாதத்தாலே எங்கும் பார்த்து இலக்குக் காணாமல் வாராநிற்க, அந்தப் பார்வை தனக்கும் பள்ளமடையான தென் திசையிலே யானவளவிலே, "மாறிமாறிப் பலபிறப்பும் பிறந்து" என்று தாமே அருளிச்செய்தபடி ஜந்ம பரம்பரைகளிலே தோள்மாறி நித்ய ஸம்ஸாரியாய்ப் போருகிற நம்மாழ்வார் மேலேபட, அந்த நிர்ஹேதுக கடாக்ஷ விசேஷத்தாலே திவ்யஜ்ஞாந பக்திகளைப் பெற்ற ஆழ்வார் அந்த எம்பெருமானுடைய ஸ்வரூபரூபகுணவிபூதிகளை நன்றாக அநுபவித்துக்கொண்டிருக்க, அவ்வநுபவம் உள்ளடங்காமல் பாசுரங்களாகப் புறம்பே வழிந்து ஸர்வலக்ஷண ஸம்பந்நமான திவ்ய ப்ரபந்தமாய்த் தலைக்கட்டிற்று.

அப்படிப்பட்ட திவ்யப்ரபந்தமாகிய திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்னும் நான்கு பிரபந்தங்களுள் ஸகலார்த்த புஷ்கலமும் ஸாமவேதஸாரமுமான திருவாய்மொழியின் பாசுரங்களின் அர்த்த விசேஷங்களை வெளியிடுவதற்கு ஆறாயிரப்படி முதலிய பல வியாக்கியானங்கள் திருவவதரித்திருந்தாலும், ஆழ்வாருடைய பெருமையையும் அருளிச்செயல்களின் சீர்மையையும் திருவாய்மொழியின் ஒப்புயர்வற்ற சிறப்பையும் இதுதன்

னில் ஸாரமாகக் குறிக்கொள்ளவேண்டிய அபூர்வமான பலபல ஸ்வாபதேசார்த்தங்களையும் விசேஷார்த்தங்களையும் விளக்கியருளத் திருவுள்ளம்பற்றி, நம்பிள்ளை திருவடிகளில் நிழலும் அடிதாறுமாயிருந்த வடக்குத் திருவீதிப்பிள்ளையின் இளைய திருக்குமாரரும் பிள்ளைலோகாசார்யருடைய திருத்தம்பியாருமான அழகியமணவாளப்பெருமாள் நாயனார் ஆசார்யஹ்ருதயம் என்கிற அற்புதமான திவ்ய க்ரந்தத்தை அருளிச்செய்தருளினார்.

வைதிக ஸந்தாநத்திற்கு ப்ரதம ஆசார்யரான ஆழ்வார் அருளிச்செய்த திவ்யப்ரபந்தங்களில் அவருடைய திருவுள்ளக் கருத்துக்களைத் தெளிய வெளியிடுகையாலே இது தனக்கு ஆசார்யஹ்ருதயமென்று திருநாமமாயிற்று.

இப் பிரபந்தத்தில் இவரருளிச்செய்கிற வாக்கியங்களெல்லாம் பெரும்பாலும் அருளிச்செயல் சந்தைகளைச் சேர்த்தே தொகுத்ததாயிருக்கும். இவ்வுலகில் எத்தனையோ பிரபந்தங்கள் அவதரித்திருந்தாலும் சொல்தொடையிலும் பொருள் நடையிலும் இதனையொத்த பிரபந்தம் இதுவேதான் என்னலாமத்தனையொழிய இதுபோன்ற வேறொரு க்ரந்தமும் அவதரித்திலது.

ஸகல ச்ருதி ஸ்ம்ருதீதிஹாஸ புராணங்களும் ஆழ்வாரருளிச்செயல்களும் அருளிச்செயல்களின் வியாக்கியானங்களும் ஆசார்யர்களின் ஸ்தோத்ர ஸூக்திகளுமெல்லாம் ஒருங்கே திரண்டு இவ்வாசார்யஹ்ருதய ப்ரபந்தமாக வடிவெடுத்ததென்றால் மிகையாகாது.

இதில் அர்த்தத்திற்காட்டிலும் சொல்தொடைதானே மிகவும் இனிதாயிருக்கும். இதனை ஆழ்ந்து அநுபவிக்கும்படியான பாக்கியம் வாய்ந்தவர்கள் இத்தையொழிய வேறொன்றிலும் காலக்ஷேபம்பண்ணக் கருதார்கள். இதனை அறியக்கற்று வல்லாரானவர்கள் ஸர்வஜ்ஞர் என்னும் சிறப்புப் பெயர் பெறுதற்கே உரியராவர்.

இப் பிரபந்தம் ஸூத்ரரூபமாய் ப்ரஹ்மஸூத்ரத்திற்காட்டிலும் கஹநமாக ஆழ்ந்த கருத்தையுடைத்தாய் ஒருவர்க்கும் எளிதில் பொருளறியவொண்ணாதபடி யிருந்தமையை நோக்கி விசதவாக்சிகாமணியாய் ஸர்வஜ்ஞ ஸார்வபௌமரான மணவாளமாமுனிகள் 'ஸூத்ரத்திற்கு வ்ருத்தி' என்னலாம்படியாய் ஆச்சரியமான வியாக்கியானமிட்டருளினர். அந்த வியாக்கியானத்தைத் தழுவி ஸாராம்சங்களை எளிய நடையில் தெளிவாகத் திரட்டி வசநரூபமாக ஆசார்யஹ்ருதய ஸாரம் என்னும் நூல் எழுதப்புகுகின்றேன். இதிலுள்ள குற்றங்குறைகளைப் பெரியோர் தமது இயற்கை நற்கருணையால் பொறுத்தருள்வாராக.

இங்ஙனம்:

ஸ்ரீவைஷ்ணவ தாஸன்,

அண்ணங்கரார்ய தாஸன்.

ஸ்ரீ:

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.



அன்னபுகழ் முடும்பை அழகியமணவாளப்பெருமாள் நாயனார்

அருளிச்செய்த

# ஆசார்ய ஹ்ருதயம்.

[முதல் ப்ரகரணம்.]

1. காருணிகனான ஸர்வேச்வரன் அறிவிலாமனிசர் உணர்வேனும் சுடர் விளக்கேற்றிப் பிறங்கிருள்நீங்கி மேலிருந்த நந்தாவேதவிளக்கைக்கண்டு நல்லதும் தீயதும் விவேகிக்கைக்கு மறையாய்விரிந்த துளக்கமில்விளக்கில் கொளுத்தின ப்ரதீபமான கலைகளை நீர்மையினாலருள்செய்தான்.

---

ஸ்ரீ:

பெருமாள்கோயில் பிரதிவாதிபயங்கரம்

அண்ணங்கராசாரியர் ஸ்வாமி தொகுத்தருளின

## ஆசார்யஹ்ருதய ஸாரம்.

[எம்பெருமான் ஸம்ஸாரிகளுக்கு விவேகமுண்டாகும்பொருட்டு சாஸ்திரங்களை உதவினன் என்பது.]

1. பேரருளாளனான பரமபுருஷன், அநாதியான அஜ்ஞான அந்தகாரத்தினால் ஆக்ரமிக்கப்பட்டவர்களாய் அதனால் ஒருவிதமான விவேகமும் இல்லாதவர்களான ஸம்ஸாரிகள் ஞானமாகிற சுடர்விளக்கையுடையவர்களாய் அதனால் அஜ்ஞானவிருள் நீங்கப்பெற்று வேதாந்தங்களில் விளங்கும் விளக்கான தன்னை [பகவானை], தக்க ஞானக் கண்களாலேகண்டு நல்லது தீயதுகளைப் பகுத்துணர்வதற்காக [அதாவது 'பகவத்விஷயம் நன்று, ஸம்ஸாரம் தீது' என்று விவேகம் பெறுவதற்காக] * மறையாய்விரிந்த விளக்கு என்றும் * துளக்கமில் விளக்கு என்றும் சொல்லுகிறபடியே வேதமனைத்துக்கும் வித்தாகி ஒருநாளும் சலியாமல் நின்று எல்லாப்பொருள்களையும் விளக்குமதான அகாரத்தில் நின்றும் தோன்றியவையாய் சிறுவிளக்கில் நின்றுந்தோன்றின பெருவிளக்குப் போலேயான பன்னுகலை நால்வேதங்களைத் தனது இயற்கையின்னருளால் வெளியிட்டருளினன்.

2. விவேகஃபலம் வீடுபேற்று.

3. த்யாஜ்யோபாதேயங்கள் ஸுகதுஃகங்கள்.

4. இவற்றுக்கெல்லை இன்புதுன்பளி பன்மாமாயத்தழுந்துகையும் களிப்புங் கவர்வுமற்றுப் பேரின்பத்தின்புறுகையும்.

---

[அந்த விவேகத்திற்கு இன்னது பயன் என்பது]

2. 'நல்லது தீயதுகளைப் பகுத்துணர்வதற்காக' என்று கீழ்ச் சொல்லப் பட்டதே, அந்த பகுத்துணர்வுக்கு என்ன பயன்? என்னில், விடவேண்டிய வற்றை விடுகையும் பற்றவேண்டியவற்றைப் பற்றுகையுமே பகுத்துணர்வுக்குப் பயன். [ஹேயங்கள் இன்னவை என்று தெரிந்துகொண்டு அவற்றை விட்டொழிக்கவும் உபாதேயங்கள் இன்னவையென்று தெரிந்துகொண்டு அவற்றைப் பற்றவுமே பகவான் சாஸ்திரங்களை அருளினன் என்றதாயிற்று.]

[ஹேயம் இன்னது உபாதேயம் இன்னது என்பது.]

3. வெறுக்கத்தக்கது எது? விரும்பத்தக்கது எது? என்னில்; உலகில் ஒவ்வொருவரும் 'எனக்கு ஸுகமுண்டாகவேணும்; துக்கம் உண்டாகலாகாது' என்றிருக்கிறபடியால் அனைவர்க்கும் ஸுகம் இஷ்டமாய் துக்கம் அநிஷ்டமாயிருக்கையாலே, ஸுகம் உபாதேயம், துக்கம் த்யாஜ்யம்.

[ஸுகதுக்கங்களின் எல்லை.]

4. உலகில் ஸுகதுக்கங்கள் ஒரேவிதமாக இல்லை; ஸுகத்தில் எத்தனையோ கணுக்கள் உண்டு; அப்படியே துக்கத்திலும் பல கணுக்கள் உண்டு; ஆகவே, 'இதற்கு மேற்பட்ட துக்கமில்லை' என்னும்படியாய் சரமாவதியான துக்கமும், 'இதற்கு மேற்பட்ட ஸுகமில்லை' என்னும்படியாய் சரமாவதியான ஸுகமும் இன்னதென்று தெரிந்துகொள்ளவேண்டியது அவசியம். துஃக்கத்திற்கு எது எல்லையென்னில்; ப்ரக்ருதி ஸம்பந்தமடியான ஜன்மங்களில்நின்றும் ஒருகாலும் நீங்காமைக்கு உறுப்பானவையாய், பலவகைப்பட்டிருப்பவையாய், அகப்பட்டவர்கள் தப்பமுடியாதவையாய் * இன்னமுதெனத்தோன்றி எப்படிப்பட்ட அறிவுடையாரையும் கலக்கப்பண்ணுகையாலே ஆச்சரியங்களாய் இராநின்ற சப்தாதி விஷயங்களிலே துக்கப்பட்டு ஸம்ஸாரத்திலே அழுந்துகைக்கு மேற்பட்ட துக்கமில்லாமையாலே இதுவே துக்கங்களுக்கு முடிவான எல்லை. ஸுகத்திற்குப் பரமாவதி ஏதென்னில்; அற்பங்களாயும் அஸ்திரங்களாயுமுள்ள துஷ்ட விஷயங்கள் கிடைப்பதனாலே உண்டாகிற களிப்பும் அவை கிடையாமற்போவதனாலே உண்டாகிற கவலையுமாகிற விவை கழிந்து * அந்தமில் பேரின்பமான பரமபதத்திலே அடியார்கள் குழாங்களையுடன் கூடி இடையறாத பகவதநுபவத்தாலே ஆநந்தமயமாயிருப்பதற்கு மேற்பட்ட ஆநந்தமில்லாமையாலே இதுவே ஸுகத்துக்கு முடிவான எல்லை. [இருள் தருமாஞாலத்திலே மாறி மாறிப் பல பிறப்பும் பிறந்து அலமந்து அழுந்துகை துக்கங்களுக்கு எல்லை. நித்ய விபூதியில் இடைவிடாது பகவானை அநுபவிக்கை ஸுகங்களுக்கு எல்லை என்றதாயிற்று.]

5. அநந்தக்லேச நிரதிசயாநந்த ஹேது — மறந்தேனறியகிலாதே உணர்வி லேனேணிலேனயர்த்தேன்றும் உய்யும்வகை நின்றவொன்றை நன்கறிந்த னன்உணர்வினுள்ளே ஆம்பரிசேன்றுஞ்சொல்லுகிற ஜ்ஞாதவ்ய பஞ்சக ஜ்ஞாநாஜ்ஞாநங்கள்.

6. இவற்றுக்குக் காரணம் இரண்டிலோன்றினில் ஒன்றுகைகள்.

7 ஸத்வாஸத்வநிதாநம் இருள்தருமமலங்களாகவேன்னும் ஜந்மஜாயமாந கால கடாக்ஷங்கள்.

---

[அந்த ஸுகதுக்கங்களுக்கு ஹேது இன்னதேன்பது.]

5. இப்படிப்பட்ட துக்கமும் ஸுகமும் இவனுக்கு உண்டாகைக்குக் காரணம் ஏதென்னில்; பரஸ்வரூபத்தையறிதல், ஸ்வஸ்வரூபத்தையறிதல், விரோதிஸ்வரூபத்தையறிதல், உபாயஸ்வரூபத்தையறிதல், புருஷார்த்தஸ்வரூபத்தையறிதல் ஆகிற அர்த்தபஞ்சகஜ்ஞானம் இல்லாமை கீழ்ச்சொன்ன எல்லையான துக்கத்திற்குக் காரணமாம். அந்த அர்த்தபஞ்சக ஜ்ஞானம் குறையற்றிருத்தல் கீழ்ச்சொன்ன எல்லையான ஸுகத்திற்குக் காரணமாம். [ஸகல சாஸ்த்ர தாத்பரியமாய் ஆத்மோஜ்ஜீவநத்திற்கு அவசியம் அறியவேண்டியதான அர்த்தபஞ்சகத்தை அறியாமையும் அறிகையுமே ஸம்ஸார மோக்ஷங்களுக்கு ஹேது என்றதாயிற்று.]

[அர்த்தபஞ்சகஜ்ஞாநமுண்டாவதற்கும் அது உண்டாகாமைக்கும் அடி இன்ன தேன்பது.]

6. சிலர்க்கு அர்த்தபஞ்சகஜ்ஞானம் உண்டாவதற்கும் சிலர்க்கு அது உண்டாகாமற் போவதற்கும் காரணமேதென்னில்; ஸத்வம், ரஜஸ், தமஸ் என்கிற மூன்று குணங்களுள் பிந்தின ரஜஸ்தமோகுணங்கள் மலிந்திருக்கப்பெறுகையே அர்த்தபஞ்சகஜ்ஞான முண்டாகாமைக்குக் காரணம். * முக்குணத்து இரண்டவையகற்றி ஒன்றினிலொன்றி நிற்கையாகிற ஸத்வகுணப்ராசுர்யமே அர்த்தபஞ்சகஜ்ஞானத்திற்குக் காரணம். [ரஜஸ்தமோகுணங்கள் அந்யதாஜ்ஞாந விபரீதஜ்ஞாநங்களுக்கு ஹேதுவாய் ஸத்வகுணம் யதார்த்தஜ்ஞானத்திற்கு ஹேதுவாயிருக்கையாலே இப்படி சொல்லிற்று.]

[கீழ்ச்சோன்ன குணப்ராசுர்ய வைஷம்யத்திற்கு அடி இன்னதேன்பது.]

7. சிலர்க்கு ரஜஸ்தமோகுணங்கள் மலிந்திருக்கைக்கும் சிலர்க்கு ஸத்வகுணம் ப்ரசுரமாயிருக்கைக்கும் காரணமேதென்னில்; * இருள்தருமாஞாலத்துட்பிறவி யென்கிற அஜ்ஞாநாவஹமான ஸம்ஸாரத்தில் ஜன்மம் ரஜஸ்தமோ குணங்கட்கு ஹேதுவாம்; "𑌜𑌾𑌯𑌮𑌾𑌨𑌂 𑌹𑌿 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌯𑌂 𑌪𑌶𑍍𑌯𑍇𑌨𑍍𑌮𑌧𑍁𑌸𑍂𑌦𑌨𑌃 । 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌸𑍍𑌸𑌤𑍁 𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌃 𑌸 𑌵𑍈 𑌮𑍋𑌕𑍍𑌷𑌾𑌰𑍍𑌥𑌚𑌿𑌨𑍍𑌤𑌕𑌃 ॥ — ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேந் மதுஸூதந: ஸாத்விகஸ் ஸ து விஜ்ஞேயஸ் ஸ வை மோக்ஷார்த்த சிந்தக:." (ஜநிக்கும்போது எவனை எம்பெருமான் கடாக்ஷிப்பனோ அவனே ஸாத்விகனுவன், அவனே முமுக்ஷுவாவன்.) என்கிறபடியே ஜாயமாநகாலத்தில் * அவன் கண்களாலே அமலங்களாகவிழிக்குமென்

8. இவற்றுக்குமூலம் இருவல்லருள் நன்வினைகள்.

9. கர்மக்ருபா பீஜம் பொய்ந்நின்ற அருள்புரிந்தவென்கிற அவித்யா ஸௌஹார்த்தங்கள்.

10. ஏதந்நிமித்தம் முன்னமே முதல்முன்னமேயான அசித் நாராயண ஸம்பந்தங்கள்.

11. இவை கிட்டமும் வேட்டுவேளானும்போலே ஒண்பொருள் பொருளல்

---

ணப்படுகிற பரமபாவநமான பகவத்கடாக்ஷமே ஸத்வகுண ப்ராசுர்யத்திற்கு ஹேதுவாம்.

[ஜன்மத்திற்கும் ஜாயமாநகாலகடாக்ஷத்திற்கும் மூலம் இன்னதென்பது.]

8. * சார்ந்தவிருவல்வினைகளென்று ஆத்மாவோடு பிரிக்கவொண்ணாதபடி பொருந்திக்கிடக்கிற ப்ரபலங்களான புண்யபாபங்கள் பிறப்புக்கு ஹேதுவாம்; * தொல்லருள் நல்வினை யென்கிற எம்பெருமானுடைய இயற்கையின்னருளாகிற ஸுக்ருதம் ஜாயமாந காலகடாக்ஷத்திற்கு ஹேதுவாம்.

[இருவல்வினைகளுக்கும் எம்பெருமானருளுக்கும் பீஜம் இன்னதென்பது]

9. கீழ்ச்சொன்ன புண்யபாப ரூப கருமங்களுக்கு பீஜம் * பொய்ந்நின்ற ஞானமுமென்கிற அவித்யை. பகவத்க்ருபைக்கு பீஜம் * அருள்புரிந்த சிந்தை யென்கிற ஸௌஹார்த்தம். [ஆத்மாக்களின் உஜ்ஜீவநத்திற்கு எம்பெருமான் க்ருஷிபண்ண இழிகைக்கு மூலகாரணமாக ஸௌஹார்த்தமென்பது சாஸ்த்ரங்களிற் சொல்லப்பட்டது. இந்த ஸௌஹார்த்தமடியாகவே சேதநர்களின் விஷயமாக அவன் திருவுள்ளத்தில் இரக்கம் பிறப்பது.]

[அந்த அவித்யைக்கும் ஸௌஹார்த்தத்திற்கும் அடி இன்னதென்பது.]

10. "முதாவியில் தடுமாறு முயிர் முன்னமே" என்று சொல்லப்படுகிற அநாதியான அசித்ஸம்பந்தம் அவித்யைக்கு நிமித்தமாம்; "அடியேனடைந்தேன் முதல் முன்னமே" என்று சொல்லப்படுகிற அநாதியான நாராயண ஸம்பந்தம் ஸௌஹார்த்தத்திற்கு நிமித்தமாம். [ஆக, அநாதியான அசித்ஸம்பந்தமடியாக அவித்யை, அது அடியாகப் புண்ய பாப ரூப கருமங்கள், அது அடியாக ஜன்மம், அது அடியாக ரஜஸ்தமோகுணப்ராசுர்யம் அது அடியாக அர்த்தபஞ்சகஜ்ஞாநமில்லாமையாய் அது அடியாக ஸம்ஸார துःக்கம்வரும்; அநாதியான நாராயண ஸம்பந்தமடியாக பகவத் ஸௌஹார்த்தம், அது அடியாக க்ருபை, அது அடியாக விசேஷகடாக்ஷம், அது அடியாக ஸத்வகுணபூர்த்தி. அது அடியாக அர்த்தபஞ்சகஜ்ஞானமுண்டாய் அது அடியாக மோக்ஷஸுகமுண்டாம் என்றதாயிற்று.]

[அசித்ஸம்பந்தமும் நாராயணஸம்பந்தமும் ஆத்மவஸ்துவுக்கு இன்னதுசெய்யுமென்பது.]

11. தன்னோடு சேர்ந்ததொரு மாணிக்கத்தை ஒளியறத்தின்று உருவழித்துத் தன்னைப்போலேயாக்கும் கிட்டம்போலே அசித்ஸம்பந்தமானது

லாதவையென்றுதே நானிலாத யானுமுளனுவனென்கிற ஸாம்யம்பெறத் தின்றூதி அந்தமும் வாழ்வுமாகிற ஹாநிஸத்தைகளை உண்டாக்கும்.

12. ஒன்று கூடினதாய் பற்றறுக்க மீண்டோழிகையாலே பழவடியே னென் னுமதோன்றுமே ஒழிக்க வொழியாதது.

13. இந்த § உதரத்தரிப்பு த்ரைகுண்ய விஷயமானவற்றுக்கு ப்ரகாஶகம்.

---

* அந்நலத் தொண்பொருளெனப்படுகிற ஆத்மவஸ்துவின் சீர்மைபாராமல் தன்னோடே அது ஸாம்யம் பெறும்படியாக ஜ்ஞாநலேசமறத் தின்று அதற்கு ஸத்தாஹாநியை யுண்டாக்கும். ஏதேனுமொரு புழுவைக் கொண்டுவைத்து ஊதித் தன்னோடு ஒற்றுமைபெற்றதாக்குங் குளவிபோலே பகவத்ஸம்பந்தமானது — * பொருளல்லாதவென்னை யென்னும்படி ஜ்ஞாநலோபத்தாலே அவஸ்துவாய்க் கிடக்கிற ஆத்மவஸ்துவின் சிறுமைபாராதே தன்னோடொத்ததாம்படி செய்து ஸத்தாலாபத்தையுண்டாக்கும்.

[ஆத்மாவுக்து பகவத்ஸம்பந்தமே ஸ்திரம் என்பது.]

12. இப்படி அநாதியாகச் சொல்லப்பட்ட அசித்ஸம்பந்த நாராயண ஸம்பந்தங்களாகிற இரண்டு ஸம்பந்தமும் ஆத்மாவுக்கு நித்யமாயிருக்குமோவென்னில்; அசித்ஸம்பந்தமானது ஆத்மாவுக்கு ஸ்வரூபமன்றியே வந்தேறியாய், ஸர்வசக்தனான எம்பெருமானாலே ஒருநாளிலே ஸவாஸநமாகப் போக்கப்பட்டுக் கழிந்து போய்விடுகையாலே "திருமாலே! நானுமுனக்குப் பழவடியேன்" என்னும்படி அநாதியாயிருக்கிற சேஷ சேஷித்வ ரூபமான பகவத்ஸம்பந்த மொன்றே "உன்றன்னோடுறவேல் நமக்கு இங்கொழிக்கவொழியாது" என்கிறபடியே கழிக்கப்போகாதது. [பிரக்ருதிஸம்பந்தமானது வந்தேறியாயும் கருமமடியானதாயு மிருக்கையாலே அநித்யமாயிருக்கும்; பகவத்ஸம்பந்தம் அப்படியல்லாமல் அநாதியாய்நிருபாதிகமாகையாலே நித்யமாயிருக்குமென்றதாயிற்று. ஆனால் வந்தேறியான பிரக்ருதிஸம்பந்தத்தை அநாதியென்று சொல்லுவானேன்? என்னில்; வந்தேறின காலத்துக்கு அடி தெரியாமையாலே அநாதியென்று பிரமாணங்கள் சொல்லுகையாலே சொல்லுகிறோம். அடி தெரியாதபோது வந்தேறியென்று எப்படி சொல்லலாமென்னில்; ஒருநாள்வரையிலே எம்பெருமானருளால் அது கழியக்காண்கையாலே வந்தேறியென்பது நிச்சயிக்கப்படுகிறது.]

[இந்த ஒழிக்க ஒழியாத உறவே எம்பெருமான் கலைகளையருளினதற்கு ஹேதுவென்கிறது.]

13. இந்த நாராயணத்வப்ரயுக்தமான குடல்துடக்குத்தான் ஸத்வரஜஸ் தமஸ்ஸுக்களாகிற முக்குணங்கட்கும் வசப்பட்டொழுகுகின்ற சேதநரை இலக்காகக்கொண்ட வேதங்களை வெளியிட்டருளுகைக்கு ஹேதுவாயிற்று. [தாமஸ

---

§ உதரத்தரிப்பு—குடல்துடக்கு; அதாவது - தேஹஸம்பந்தம். 'உதிரத்தரிப்பு' என்பர் சிலர்; ரக்தஸம்பந்தமென்றபடி.....தெறிப்புஎன்பராம் சிலர்.

14. வத்ஸலையான மாதா பிள்ளை † பேகணியாமல் மண் தின்னவிட்டு ப்ரத்யௌஷதமிடுமாபோலே எவ்வுயிர்க்கும் தாயிருக்கும் வண்ணமானவிவனும் ருசிக்கீடாகப் பந்தமும் பந்தமறுப்பதோர் மருந்தும் காட்டுமிறே.

15. அதுதானும் ஆஸ்திக்ய விவேக அந்யசேஷத்வஸ்வஸ்வாதந்த்ர்யநிவ்ருத்தி

---

ராயும் ராஜஸராயும் ஸாத்விகராயுமுள்ள சேதநருடைய ருசிக்குத் தக்கபடி புருஷார்த்தங்களையும் அவற்றின் ஸாதநங்களையும் பூர்வபாகத்தாலே வேதம் பரக்கச் சொல்லுகையாலே * த்ரைகுண்யவிஷயமென்று வேதத்தைச் சொல்லுகிறது.]

[மோக்ஷஹேதுவான சாஸ்திரங்களோடுகூட பந்தஹேதுவான சாஸ்த்ரங்களையும் எம்பெருமான் காட்டினதற்கு ஹேது இன்னதென்பது.]

14. எம்பெருமான், ஸம்பந்தமடியாக சாஸ்த்ரப்ரதானம் பண்ணினானாகில் மோக்ஷஹேதுவான சாஸ்திரங்களை மாத்திரமே காட்டவேண்டியிருக்க, இஹலோக பரலோக போக ஸாதனங்களை விதித்து பந்தஹேதுவுமான சாஸ்த்ரங்களையும் காட்டினது என்னெனில்; வாத்ஸல்யத்தோடுகூடின பெற்ற தாயானவள், தன் பிள்ளை மண்ணை யாசைப்பட்டதென்றால் அதன் முகம் கன்றாமல் முந்துற மண்ணைத் தின்னவிட்டுப் பின்னை அதற்கு மாற்று மருந்திடுமாபோலே * எவ்வுயிர்க்கும் தாயோனான எம்பெருமானும் சேதநருடைய ருசிக்குத் தக்கபடி பந்தக சாஸ்திரங்களையும் காட்டிவைத்துப் பின்னை பந்தமறுப்பதோர் மருந்தான சாஸ்த்ரங்களையும் கட்டிவைத்தான். [ஸம்பந்தமடியான வாத்ஸல்யத்தாலே இப்படி செய்கையாலே ஸம்பந்தக்கொத்தை வாராதென்றவாறு.]

[பந்தக சாஸ்திரங்களைக் காட்டினதும் படிப்படியாக அவர்கள் ஈடேறுகைக்கு இட்டவழி என்கிறது.]

15. இப்படி வாத்ஸல்யத்தாலே செய்தானாகிலும் முக்குணங்கட்கும் வசப்பட்ட சேதநர்க்கு ருசிக்கு இணங்கின பலன்களையும் ஸாதநங்களையும் விதிக்கிற பந்தக சாஸ்திரங்களையும் காட்டிவைத்தால் அவர்கள் ஸம்ஸாரிகளாகவே ஒழிந்துபோகக் காரணமாகாதோவென்னில்; ஆகாது, அதுவும் க்ரமேண அவர்கள் ஈடேறுகைக்கே இட்டவழியாகும். எங்ஙனேயென்னில்; ஒருவனைக் கொலை செய்கிற வழிகள், ஸ்வர்க்கபோகத்திற்குப் போகிற வழிகள் முதலானவற்றைக்காட்டும் சாஸ்த்ரங்களேயன்றோ பந்தக சாஸ்த்ரங்களெனப்படும்; இப்படிப்பட்ட சாஸ்த்ரங்களையும் எம்பெருமான் காட்டிவைத்திருப்பதற்கு ப்ரயோஜநம் கேண்மின்;—தமோகுணம் மிக்கவர்களாய்ப் பொருளீட்டுகைக்குப் பரஹிம்ஸையே போதுபோக்காய்த் திரிகிற நாஸ்திகரைக் குறித்து முதலிலே மோக்ஷத்தை விதித்தால் அவர்கட்கு அது ருசிக்கமாட்டாதாகையாலே அன்னவர்கட்கு உத்தேச்யமாகவுள்ள பரஹிம்ஸைக்கு உபாயமான அபிசார கருமத்தை

---

† 'பேகணித்தல்' என்றாலும் 'பேகணித்தல்' என்றாலும் ஒக்கும்; முகம் கன்றிப் போதல். முகவிகாரம்.

பாரதந்த்ர்யங்களையுண்டாக்கினவழி.

16. ஶாஸ்த்ரவிஹிதமான தேஹவர்ணாஶ்ரமாதிகாரபலமோக்ஷஸாதநாதி

---

"ஶ்யேநேநாபிசரந் யஜேத" என்பது முதலானவற்றிலே விதித்தது: பரஹிம்ஸை பண்ணித் தீருவதற்கு என்னவுபாயமென்று பார்த்துக்கொண்டிருந்த அவர்கள் ஒருவழியாலும் அது நிறைவேறக் காணாமையாலே 'ஏதோ சிலர் சாஸ்திரமென்று சொல்லிக்கொண்டிருக்கிறார்களே, அந்த சாஸ்திரத்தில் என்ன உபாயம் சொல்லியிருக்கிறதோ அதையாவது அநுஷ்டித்துப் பார்ப்போம்' என்று நினைத்து அந்த அபிசாரகருமத்தை அநுஷ்டிக்க, அதன்படி பலன் கைபுகுகையாலே அவர்களுக்கு 'சாஸ்திரமுண்டு' என்கிற நம்பிக்கை பிறக்கிறது. அப்படி ஆஸ்திக்யமுண்டான பின்பு /சாஸ்திரங்கள் சொல்லுகிற விஷயம் உண்மையாகவேயிருக்கிறதே, நாம் இப்படி பரஹிம்ஸைபண்ணி இஹலோக இன்பங்களை நண்ணி ஜீவிப்பதிற்காட்டிலும் இனிதான மேலுலக இன்பங்களை யடைந்து வாழலாமே' என்று ஆசையை உண்டாக்கவல்ல "ஜ்யோதிஷ்டோமேந ஸ்வர்க்ககாமோ யஜேத" இத்யாதிகளான சாஸ்திரங்களிற் கண்வைத்து ஸ்வர்க்கம் முதலிய புருஷார்த்தங்களையும் அவற்றின் உபாயங்களையும் ஆராயப்புக, அவ்வழியாலே 'தேஹத்திற்காட்டில் வேறுபட்டதான ஆத்மவஸ்து உண்டு' என்கிற விவேகம் பிறக்கிறது. இப்படி ப்ரக்ருத்யாத்ம விவேகம் பிறந்த பின்பு "ஸ்வர்கேபி பாதபீதஸ்ய க்ஷயிஷ்ணோர் நாஸ்தி நிர்வ்ருதி:" என்றும் "க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விஶந்தி" என்றும் சொல்லுகிறபடியே அநித்யமான ஸ்வர்க்க புருஷார்த்தத்தைப் பெற்றுத் துன்பங்கலந்த இன்பத்தை அநுபவித்து மீள்வதிற்காட்டிலும் இன்பமயமான சாச்வத புருஷார்த்தத்தைப்பெற்று நிலைநின்றுவாழலாமே! என்கிற ஆசையை உண்டாக்கவல்ல, [ஆத்மபோகமாகிற கைவல்ய மோக்ஷத்திற்கு வழிகாட்டியான] சாஸ்திரங்களிற் கண்வைத்து அவ்வழியாலே ஆத்மஸ்வரூப வைலக்ஷண்யத்தையுணர, அந்ய சேஷத்வ நிவ்ருத்தி பிறக்கிறது. அதற்குப்பிறகு, கேவலம் ஸ்வாத்மாநுபவமாகிற அதிற்காட்டிலும் பரமவிலக்ஷணமான பரமாத்மபோகத்தைக் காட்டுகிற சாஸ்திரங்களிற் கண்வைத்து அதன் சீர்மையையும் அதற்கு ஸாதநமான பக்தியையும் ஆராய்ச்சிசெய்ய, அவ்வழியாலே ஸ்வஸ்வாதந்திரிய நிவ்ருத்தி உண்டாகிறது. அதன் பிறகு * பத்தி முதலாமவற்றில் பதிகூடாமல் தளருமளவில் ஸ்வயத்ந நிவ்ருத்திரூபமான ப்ரபத்தியைக் காட்டுகிற சாஸ்திரங்களில் கண்வைக்க ஸ்வரூப யாதார்த்மிய வேஷமான பாரதந்திரியம் ஸித்தித்ததாகிறது. ஆக இப்படி க்ரமேண ஈடேறுகைக்கு இட்டவழியேயாம் சாஸ்த்ரங்கள்.

[பலபல அர்த்த விசேஷங்களை வெளியிடுகின்ற சாஸ்திரங்களைப் பயில்வது மிகவும் அரிதென்று எம்பெருமான் ஸகல சாஸ்த்ர தாத்பர்யமான திருமந்திரத்தை வெளியிட்டருளினன் என்பது.]

16. முதல் சூர்ணிகையில் 'கலைகளை நீர்மையினால் அருள்செய்தான்' என்று ப்ரஸ்தாவிக்கப்பட்ட சாஸ்திரங்களில் பிரதிபாதிக்கப்படுகிற விஷயங்கள் எல்லை

युगधर्म வ்யூஹ ரூப க்ரியாதிகளை யறிவிக்கிற பாட்டுப்பரப்புக்குப் பெரிய தீவினிலோன்பதாங்கூறும் மானிடப்பிறவியும் ஆக்கைநிலையும்

யில்லாதவை. அந்த விஷயங்களை நிரூபிக்கப்புகுவோமாயின் ஒவ்வொரு விஷயமும் நான்கு நான்கு வகையாயிருக்கும். எங்ஙனேயென்னில்; தேவ சரீரமென்றும் மநுஷ்ய சரீரமென்றும் (பசுபக்ஷ்யாதி) திர்யக் சரீரமென்றும் ஸ்தாவர சரீரமென்றும் தேஹம் நான்குவகைப்படும். பிராஹ்மண, க்ஷத்ரிய, வைச்ய, சூத்ர ரூபத்தாலே வர்ணம் நான்குவகைப்படும். ப்ரஹ்மசர்யம்; கார்ஹஸ்தியம், வாநப்ரஸ்தம், ஸம்ந்யாஸம் என ஆச்ரமம் நான்குவகைப்படும். "चतुर्विधा भजन्ते मां जनास्सुकृतिनोऽर्जुन । आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी च भरतर्षभ !" என்று கீதையிற் சொன்னபடியே புதிதாகச் செல்வத்தை விரும்புதல், இழந்த செல்வத்தை விரும்புதல். கைவல்யத்தை விரும்புதல், பரமபதத்தை விரும்புதல் ஆகிற அதிகாரங்கள் நால்வகைப்படும். அறம் பொருள் இன்பம் வீடு என்று புருஷார்த்தங்கள் நால்வகைப்படும். ஸாலோக்யம் ஸாமீப்யம் ஸாரூப்யம் ஸாயுஜ்யம் என்று மோக்ஷம் நால்வகைப்படும். கர்மம் ஜ்ஞாநம் பக்தி ப்ரபத்தி என்று உபாயங்கள் நால்வகைப்படும். (பஞ்சாக்நிவித்யையிற் சொல்லுகிறபடியே) गर्भगति, याम्यगति, धूमादिगति, अर्चिरादिगति என்று கதிகள் நால்வகைப்படும். க்ருதம், த்ரேதா, த்வாபரம், கலி என யுகங்கள் நால்வகைப்படும். "ध्यायन्कृते यजन्यज्ञैः त्रेतायां द्वापरेऽर्चयन् यदाप्नोति तदाप्नोति कलौ संकीर्त्य केशवम्" என்கிறபடியே த்யாநம் யஜநம் அர்ச்சநம் ஸங்கீர்த்தநம் ஆக யுகதர்மங்கள் நால்வகைப்படும். வாஸுதேவ, ஸங்கர்ஷண, ப்ரத்யும்ந, அநிருத்தரூபேண வ்யூஹம் நால்வகைப்படும். நான்கு யுகங்களிலும் "பாலினீர்மை செம்பொனீர்மை பாசியின் பசும்புறம்போலுநீர்மை பொற்புடைத் தடத்துவண்டுவிண்டுலாம்நீலநீர்மை" என்று சொல்லுகிற பால் பொன் பசும்புக் கார்வண்ணம் நான்கு. ஸ்ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம், மோக்ஷப்ரதத்வம் என்று க்ரியைகள் நான்குவகைப்படும். ஆகவிப்படி நான்கு நான்குவகைகளாக வகுக்கப்பட்ட அர்த்தவிசேஷங்களையெல்லாம் விரிவாகவிளக்குவதற்கே சாஸ்திரங்கள் ஏற்பட்டவை; அப்படிப்பட்ட அளவுகடந்த சாஸ்திரங்களை அதிகரிக்கவேண்டுமானல் அரிய பெரிய அநேக யோக்யதைகள் வேண்டும். எங்ஙனேயென்னில்;—

உப்புக்கடல், கருப்புக்கடல், கள்ளுக்கடல், நெய்க்கடல், தயிர்க்கடல், பாற்கடல், நீர்க்கடல் என்ற ஏழு கடல்களாலுஞ் சூழப்பட்ட ஏழு தீவுகளுக்கு, முறையே ஜம்பூத்வீபமென்றும் ப்லக்ஷத்வீபமென்றும் சால்மலத்வீபமென்றும் குசத்வீபமென்றும் க்ரௌஞ்சத்வீபமென்றும் சாகத்வீபமென்றும் புஷ்கரத்வீபமென்றும் பெயர். இவற்றுள் ஜம்பூத்வீபம் மற்ற எல்லாத் தீவுகளுக்கும் நடுவிலுள்ளது. அதன் நடுவில் மேரு என்னும் பொன்மலையுள்ளது; அதனைச் சுற்றியுள்ள இளாவ்ருத வருஷத்தில் ஸ்ருஷ்டிக்கப்பட்டுள்ள நான்கு மலைகளைச் சுற்றி நாற்றிசையிலும் நான்கு மரங்களுள்ளன. அவற்றிலொன்றாகிய நாவல்மரம் ஜம்பூத்வீபமென்றுஇத்தீவின் பெயர் வழங்குதற்குக் காரணமா

ஈரிரண்டி லொன்றும் இளமையு மிசைவு முண்டாய்ப் புகுவரேலுமென்
கிறதுக்குள்ளே விஷமற நின்றவாநில்லா ஆசாயியைக்கொண்டு அறக்
கற்கைஅரிதென்றிறே வேதஸாரோபநிஷத்ஸாரதராநுவாக ஸாரதமகாயத்
ரியில் முதலோதுகிற பொருள் முடிவான சுருக்கைத் தெய்வவண்டாய்

யிற்றென்று புராணங்கூறும். மற்றைத் தீவுகள் கருமபலன்களை அநுபவிப்பதற்கு மாத்திரமே உரியவையாகையாலும், இத்தீவு, பலன்களுக்குச் சாதனமானகருமங்களை அநுஷ்டிப்பதற்கும் உரிய இடமாகையாலும் இத்தீவு ஒன்றே சிறப்புறும். இதுதன்னிலும் நவமகண்டமான பாரதவருஷத்துக்குத்தான் அந்தச் சிறப்பு உள்ளது. ஆகவிப்படிச் சிறந்ததான ⁎ நாவலம்பெரிய தீவினிலொன்பதாங்கூற்றில் ஜநிக்கப்பெறவேணும். இதில் பசுபக்ஷி முதலான யோநிகளிற் பிறவாமே மநுஷ்யயோநியிற் பிறக்கப்பெறவேணும். அதிற் பிறந்தாலும் அல்பாயுஸ்ஸாக ஒழியாமே சரீரம் நிலைபெற்றிருக்கப்பெறவேணும். அப்படி சரீரம் நிலைபெற்றிருக்கப்பெற்றாலும் இதரவருணத்திலன்றிக்கே ப்ராஹ்மண வர்ணத்தில் பிறவிபெறவேணும். அதிற் பிறந்துவைத்தும் வாணாளை வீணாளாக் காதபடி, புத்தி கொழுந்துவிட்டு சாஸ்திரங்களை அப்யஸிப்பதற் குறுப்பான ⁎கிளரொளி யிளமையும் ஆஸ்தையும்வேணும். இவ்வளவும் வாய்த்து வாழ்நாளுக்குள்ளே இடையூறுகளொன்றுமில்லாமே சஞ்சலமான நெஞ்சைக்கொண்டு ச்ருதி ஸ்ம்ருதி முதலிய ஸகலசாஸ்திரங்களையும் ஆழ்ந்து அதிகரிப்பது மிகவும் அருமைப்படும். இப்படிப்பட்ட அருமையை எம்பெருமான் திருவுள்ளம்பற்றியேதிருமந்திரத்தை வெளியிட்டருளினன். அந்தத்திருமந்திரம் எப்படிப்பட்டதென்னில்;—

கர்மகாண்டமும் ப்ரஹ்மகாண்டமுமாகக் கலசியுள்ள வேதத்தில் ஸாரமானது உபநிஷத்பாகம்; அதிலும் ஸாரதரமாகவுள்ளது நாராயணாநுவாகம். அதிலும் ஸாரதமமாகவுள்ளது ஹாவகக்ஷத்ருயத்தையும் பிரதிபாதிக்கிற விஷ்ணு காயத்ரி. அப்படிப்பட்ட காயத்ரியிலே "நாராயணாய வித்மஹே" என்று முதலிலே ஓதப்பட்டதாய் ஸகலவேத ஸங்க்ரஹமாயிருப்பது அத் திருமந்திரம். இப்படிப்பட்ட திருமந்திரம் "எனக்கென்றும் தேனும் பாலும் அமுதுமாய திருமால் திருநாமம்...நமோநாராயணமே" என்கிற திருமங்கையாழ்வாரருளிச்செயலின்படியே (1) தேனாகவும் (2) பாலாகவும் (3) அம்ருதமாகவும் ப்ரவஹித்தமாகையினாலே இப்படி தேனும் பாலு மமுதுமானவிதனை எம்பெருமான் வேதத்தில் நின்றும் க்ரஹிக்கிறபோது எவ்வண்ணம் க்ரஹித்தானென்னில்; (1) தேனை க்ரஹிப்பதில் ஸாவாவஸக்ஷாரியான வண்டுதான் ஸமர்த்தமாகையாலே † தேனாகிய திருமந்திரத்தை எம்பெருமான் வண்டாகி சாகைகளிலிருந்து க்ரஹித்தான். [அதாவது, திருவாய்மொழியில் ⁎ தூவியம் புள்ளுடைத் தெய்வவண்டு—என்று எம்பெருமான் ஸாரக்ராஹியென்பதுபற்றி வண்டாகச் சொல்லப்பட்டான். வண்டு சாகைகளிலிருந்து [கிளைகளிலிருந்து] தேனை க்ரஹிப்பதுபோல் எம்பெருமானும் வேதசாகைகளிலிருந்து திருமந்திரத் தேனை க்ரஹித்தான் என்க.]

† திருமந்திரமானது ஸாரபூதமான ஸகலார்த்தங்களையும் தெரிவிப்பதனால் ஸர்வரஸமான தேன்போன்றதாகச் சொல்லப்பட்டது.

அன்னமாய் அமுதங்கோண்டவன் ஶாகைகளிலும் ஓதம்போல் கிளர் நால்வேதக்கடலிலும் தேனும்பாலுமமுதுமாகவேடுத்துப் பெருவிசும்பரு ளும் பேரருளாலே சிங்காமைவிரித்தது.

17. முனிவரையிடுக்கியும் முந்நீர்வண்ணனுயும் வெளியிட்ட ஶாஸ்த்ரதாத்பர்யங்களுக்கு விஶிஷ்டநிஷ்க்ருஷ்டவேஷங்கள் விஷயம்.

---

இனி, (2) பாலை க்ரஹிப்பதில் அன்னப்பறவையே ஸமர்த்தமாகையாலே "அன்னமாய் அன்றங்கருமறை பயந்தான்" என்கிறபடியே எம்பெருமானும் ஹம்ஸரூபியே. ஹம்ஸமானது நீரிலே கலந்து கிடக்கிற பாலை விவேகித்து எடுப்பதுபோல, எம்பெருமான்றானும் ‡ பால்போலேயிருக்கிற திருமந்திரத்தை * ஓதம்போல் கிளர்வேதநீரிலிருந்து க்ரஹித்தான்.

இனி, (3) அம்ருதத்தை க்ரஹிப்பதில் * அமுதங்கொண்ட பெருமானாகிய எம்பெருமானே ஸமர்த்தனுகையால், அசுரர்களிடத்தில் அஞ்சினவர்களாய் அமரத்வத்தை விரும்பினவர்களான தேவர்களினுடைய ரக்ஷணத்திற்காகத் திருப்பாற்கடலைக் கடைந்து அமுதங்கொண்டாப்போலே, ஸம்ஸாரத்தில் நின்று அஞ்சினவர்களாய் ஸுஶ்ருதகவகாஶரானவர்களுடைய ரக்ஷணத்திற்காக, விலக்ஷணபோக்யமாய் விநாசஹாரமுமாகையாலே அம்ருதம்போலே யிருக்கிற இத்திருமந்திரத்தை * நால்வேதக் கடலிலிருந்து க்ரஹித்தான். ஆகவிப்படி வேதஸாரமான திருமந்திரத்தைத் தானேயெடுத்து * பிணியொழித்தமரர் பெருவிசும்பருளும் பேரருளாளனுன பெருமான் அப்படிப்பட்ட நிர்ஹேதுக க்ருபையினுலே ஸ்ரீபதரிகாச்ரமத்திலே நரநாராயண ரூபேண அவதரித்துத் தானே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று ஸ்வரூப சாஸ்திரம் சுருங்கிப்போகாமல் உபதேசத்தாலும் அநுஷ்டாநத்தாலும் விஸ்தரிப்பித்தருளினன். [ஆக, எம்பெருமான் தன் க்ருபையாலே ஸம்ஸாரி சேதநரை உஜ்ஜீவிப்பிக்கைக்காக சாஸ்திரங்களையும் சாஸ்த்ர தாத்பர்யமான திருமந்திரத்தையும் வெளியிட்டானென்றதாயிற்று இதுவரையிலும்.]

[சாஸ்த்ரங்களுக்தும் சாஸ்ர தாத்பரிய்மான திருமந்திரத்திற்தும் விஷயம் இன்னதேன்பது.]

17. வியாஸர் முதலிய மஹர்ஷிகளுக்கு அந்தர்யாமியாயிருந்து அவர்களைக்கொண்டு வெளியிட்ட சாஸ்த்ரத்துக்கு சேதநருடைய தேஹவிசிஷ்டவேஷத்திலே நோக்கு; ஸ்ரீபதரிகாச்ரமத்திலே தானுனதன்மையிலே நின்று வெளியிட்ட திருமந்திரத்திற்கு சேதநருடைய நிஷ்க்ருஷ்டவேஷத்திலே நோக்கு. [சாஸ்த்ரங்களுக்கு தேஹத்திலே நோக்கு; திருமந்திரத்திற்கு ஆத்மஸ்வரூபத்திலே நோக்கு என்றபடி.]

---

‡ 'நானும் சொன்னேன் நமருமுரைமின்' என்னும்படி ஸர்வாதிகாரமாயிருக்கையாலே பால்போன்றதாகச் சொல்லப்பட்டது.

18. தோல்புரையே போமதுக்குப் பழுதிலாயோ ஶ்ரத்தைவேணும்; மனமுடையீரென்கிற ஶ்ரத்தையே அமைந்த மர்மஸ்பர்ஶிக்கு நானும் நமருமென்னும்படி ஸர்வருமதிகாரிகள்.

19. ஶாஸ்த்ரிகள் தேப்பக்கையரைப்போலே இரண்டையுமிடுக்கிப் பிறவிக் கடலை நீந்த, ஸாரஜ்ஞர் விட்டத்திலிருப்பாரைப்போலே இருகையும் விட்டுக் கரைகுறுகுங்கால மெண்ணுவர்கள்.

---

[அவை யிரண்டுக்கும் அதிகாரி நிஷ்கர்ஷம்.]

18. சாஸ்த்ரமும் சாஸ்த்ர தாத்பர்யமான திருமந்திரமும் ஸர்வாதிகாரமோ அதிக்ருதாதிகாரமோவென்னில்; ஸ்வரூபத்தில் ஊற்றமில்லாமல் மேலெழுந்தவாரியாய் தேஹத்திலே நோக்காய் நடக்கிற சாஸ்த்ரத்திற்கு ஸத்குல ப்ரஸூதியும் ஸதாசாரஸம்பத்தியுமாகிற யோக்யதை வேணுமாகையாலே சாஸ்த்ரம் அதிக்ருதாதிகாரம். "கண்ணன் கழலிணை நண்ணும் மனமுடையீர் !" என்றும் "ஶ்ரத்தைவ காரணம் ஸூக்ஷ்மாஷ்டாக்ஷர பரிக்ரஹே" என்றும் சொல்லுகிறபடியே ச்ரத்தைமாத்திரமே போதுமானதாய் ஸ்வரூபாவகாஹியான திருமந்திரத்திற்கு "நானுஞ் சொன்னேன் நமருமுரைமின் நமோ நாராயணமே" என்னும்படி அனைவரும் அதிகாரிகளாவர்.

[சாஸ்த்ர நிஷ்டருடையவும் திருமந்த்ர நிஷ்டருடையவும் படிகள் இன்னதென்பது.]

19. ஸம்ஸார நிவ்ருத்திபூர்வகமான பகவத் ப்ராப்திக்கு உபாயமாக அப்பெருமானுடைய உபாஸநத்தை விதித்தும், 'அசற்குப் பலன் கொடுப்பவன் பகவானே' என்று சொல்லியும் போருகிற சாஸ்த்ரத்திலே ஊன்றுமவர்கள், ஆறு நீஞ்சுமவர்கள் தெப்பத்தை ஒரு கையிலே யிடுக்கித் தாங்களும் ஒரு கை துழாவுமாபோலே ஸ்வப்ரயத்நமும் அதனாலாகும் பகவத் க்ருபையுமாகிற இரண்டையும் பற்றிக்கொண்டு ஸம்ஸாரமாகிற கடலைக் கடக்கப் பார்ப்பர்கள். "இவ்வாத்மவஸ்து ஸ்வப்ரயத்நத்தை உதறித்தள்ளிவிட்டு பகவானொருவனையே உபாயமாகப்பற்றி யிருக்கத்தக்கது" என்று தெரிவிக்கின்ற சாஸ்த்ரஸாரமான திருமந்திரத்தை உணர்ந்தவர்கள், ஓடமேறினவர்கள் அக்கரை சேர்வதற்கான ஸ்வயத்நத்தையும் தெப்பத்தையும் கைவிட்டு 'கரைகுறுகுவது எப்போது' என்று பார்த்துக்கொண்டு அதன் விட்டத்திலே யிருக்குமாபோலே, பிறவிக் கடலைத் தாண்டுவிக்கும் * வைகுந்தனென்பதோர் தோணியைப்பற்றி அந்த வைகுந்தனுடைய ஞானம் சக்தி முதலிய குணங்களை அநுஸந்தித்தும் தங்கள் பாரதந்திரியம் முதலிய ஸ்வரூபத்தை அநுஸந்தித்தும் நிர்ப்பரராகையாலே ஸ்வப்ரயத்நரூபமான உபாஸநாதிகளென்ன அவற்றாலாகும் பகவத் க்ருபையென்ன ஆகிய இரண்டு கையையும்விட்டு 'கேவல பகவத்க்ருபையே உத்தாரகம்' என்று அத்யவஸாயங்கொண்டு * கூவிக்கொள்ளுங்கால மின்னங் குறுகாதோ என்று பகவத்ப்ராப்தியாகிற கரையைக் கிட்டலாங் காலத்தைச் சிந்தித்துக்கொண்டிருப்பர்கள்.

20. இவை ஸ்வரூபத்தை உணர்ந்துணர்ந்துணரவும் உணர்வைப்பெறவூர மிகவுணரவுமுண்டாம்.

21. சேஷத்வ போக்த்ருத்வங்கள்போலன்றே பாரதந்த்ர்ய போக்யதைகள்.

---

[கீழ்ச்சொன்ன இருவகுப்பினர்க்கும் இப்படிப்பட்ட நிலைமை உண்டாகைக்கு அடி இன்னதென்பது.]

20. சாஸ்திரிகளுக்கு ஸ்வப்ரயத்நருசியும் திருமந்த்ரநிஷ்டர்களுக்கு மார்பிலே கைவைத்துறங்கும்படியான நிலைமையும் உண்டாவதற்கு ஹேது ஏதென்னில்; சாஸ்த்ரிகள் ஆத்மஸ்வரூபம் நித்யஜ்ஞாநகுணகமாயும் அந்த ஜ்ஞாநத்தாலே எங்கும் வியாபித்து தேஹத்திற்காட்டில் விலக்ஷணமாயும் கர்த்ருத்வபோக்த்ருத்வயுக்தமாயும் பகவத்சேஷமாயுமிருக்குமென்று ச்ரவண மநநங்களாலே ஸாக்ஷாத்கரிக்கிறார்களாகையாலே அவர்கள் ஸ்வப்ரயத்நத்தாலே பிறவிக்கடலைநீந்த நினைக்கிறார்கள். திருமந்திரநிஷ்டர்கள், ஆத்மஸ்வரூபம் தேஹாதிகளிற் காட்டில் விலக்ஷணமாயும் ஜ்ஞாத்ருத்வாதிகுணகமாயும் ததீய சேஷத்வபர்யந்த தச்சேஷத்வயுக்தமாயும் அதற்கு எல்லையான பாரதந்திரியத்தையும் போக்யதையையும் வடிவாகவுடைத்தாயுமிருக்குமென்று உணருகிறார்களாகையாலே தங்கள் பரத்தை அவன்மேலே போகட்டு ஸ்வப்ரயத்நமற்றவர்களாயிருக்கிறார்கள். [இத்தால் அவரவர்களுடைய ஸ்வரூபஜ்ஞாந தாரதம்யமே கீழ்ச்சொன்னபடிகள் உண்டாவதற்குக் காரணம் என்றதாயிற்று.]

[சேஷத்வத்திற்காட்டில் பாரதந்த்ரியமே சிறந்தது; போக்த்ருத்வத்திற்காட்டில் போக்யதையே சிறந்தது என்கிறது.]

21. ஆத்மஸ்வரூபத்தை சாஸ்த்ரமுகத்தாலே அறியுமளவில், 'இவ்வாத்மா பகவானுக்கு சேஷப்பட்டது; பகவதநுபவத்தை புஜிக்குமது' என்பதாகிற சேஷத்வமும் போக்த்ருத்வமுமே ஆத்மஸ்வரூபமாக ப்ரகாசிக்கும். சாஸ்த்ர ஸாரமான திருமந்திரத்தினுள்புக்கால் பாரதந்திரியமும் போக்யதையுமாகிற ஸ்வரூபயாதாத்மியம் பிரகாசிக்கும். இவற்றில், 'இஷ்டவிநியோகப்படுகைக்கு யோக்யமாயிருக்குந்தன்மை' என்னுமளவேயான சேஷத்வத்திற்காட்டில் சேஷிக்கு இஷ்டமானபடி விநியோகப்பட்டுத் தீருகையாகிற பாரதந்திரியம் சிறந்தது. இதுபோலவே போக்த்ருத்வத்திற்காட்டில் போக்யதை சிறந்தது; ஏனெனில்; ஆத்மா 'ஜ்ஞாதா' என்று தேறினபோதே 'போக்தா' என்றும் தேறுகிறது. ஜ்ஞாத்ருத்வமுத்தாலே போகதசையிலே விளைகின்ற ரஸங்களைத் தான் புஜிப்பவனாகையே போக்த்ருத்வம்; போக்யதை யென்பது இப்படிப்பட்டதன்று;—ஒரு வஸ்துவிலுள்ள ரஸம் வர்ணம் முதலிய எல்லாம் போக்தாவுக்கே

போக்யமாயிருப்பதுபோல ஆத்மாவிலுள்ள ஜ்ஞானம் முதலியனவும் எம்பெருமானுக்கே போக்யமாம்படி யிருப்பதுதான் போக்யதையாவது. ஆகையால் போகத்தில் 'இந்த போகம் நம்முடைய போகம்' என்று அபிமாநமுண்டாவதற்கு ஹேதுவான ஸ்வாதந்த்ர்யத்திற்காட்டிலும் அந்த அபிமானத்தை வேரறுப்பதாய் போக்த்ருத்வத்தை சேஷியினுடைய ப்ரீத்யேகவிஷயமாக ஆக்கிக்கொடுப்பதான போக்யதைதான் சிறந்தது என்னத் தட்டில்லை.

[இந்தச்சிறப்பு திருமந்திரத்தின் அமைப்பில் நன்கு விளங்குகின்றதென்றல்.]

22. [ஸர்வஜ்ஞரான மணவாளமாமுனிகளும் சிறிது பரிச்ரமப்பட்டு அர்த்த முணர்ந்த சூர்ணிகையென்று சொல்லப்படும் சூர்ணிகை இதுவே. மிகவும் ஆழ்ந்த இதன் பொருளை ஒருவாறு விளக்கிக் காட்டுவோம்.]

"ஜ்ஞாந சதுர்த்திகளின்மேலேயிறே ஆநந்தஷஷ்டிகளுக்கு உதயம்" என்பது மூலத்திலுள்ள திவ்யஸூக்தி. இதில் ஜ்ஞாநமென்று - பிரணவத்திலுள்ள மகாரத்தைக் காட்டினபடி. சதுர்த்தியென்று - அந்த ப்ரணவத்திலேயே அகாரத்தின்மேல் ஏறிக்கழிந்த சதுர்த்தியைக் காட்டினபடி. ஆநந்தமென்று - நாராயண பதத்தின்மேலுள்ள சதுர்த்தீவிபக்தியைக் காட்டினபடி. ஷஷ்டியென்று - (நம: என்றவிடத்துள்ள) ம: என்பதைக் காட்டினபடி. இனி இதன் கருத்தை விவரித்துரைப்போம் காண்மின்.]

திருமந்திரத்திற்கு உள்ளீடான ப்ரணவத்தில் மறைந்துகிடக்கிற சதுர்த்தீ விபக்தியையும் முடிவில் கிடக்கிற மகாரத்தையும் எடுத்துக்கொள்வோம். இதில் சதுர்த்தீவிபக்தியானது சேஷத்வத்தை விளக்குகின்றது. மகாரமானது "மந—ஜ்ஞாநே" என்கிற தாதுவிலிருந்து தேறின பதமாதலால் ஆத்மாவை ஜ்ஞாதாவென்று வெளியிட்டு, ஜ்ஞாதாவானபோதே கர்த்தாவாக வேண்டுதலால், கர்த்தாவானபோதே போக்தாவாக வேண்டுதலால் ஆக இவ்வழியாலே 'ஆத்மா போக்தா' என்று வெளியிட்டதாகிறது. இவ்வளவால் ஏற்பட்ட சேஷத்வமும் போக்த்ருத்வமும் மேலே ஸ்வ விரோதிகளின் உத்பத்தியை ஸஹியா நிற்கும். எங்ஙனேயென்னில், பிரணவத்திற்கு அடுத்தபடியாக நமஸ்ஸு இருக்கிறது. அந்த நம:பதமானது விரோதியைக்கழிக்கின்றதென்னுமிடம் ஸ்பஷ்டம். உலகத்தில் அப்ரஸக்தமானதற்கு ப்ரதிஷேதம் கிடையாது. இங்கு (நமஸ்ஸில்) ந என்று நிஷேதம் செய்திருப்பதால் ப்ரஸக்தமான விரோதியைத்தான் ப்ரதிஷேதிக்கின்றதென்று கொள்ளவேணும். ப்ரஸக்தமான விரோதி எதுவென்று ஆராய்ந்தால், ஸ்வரூப விரோதியும் உபாய விரோதியும் உபேய விரோதியும் என்று விளங்காநின்றது. நம: பதமானது காகாக்ஷிந்யாயத்தாலே முன்னும் பின்னும் அந்வயிக்கக்கடவது. (அஷ்ட ச்லோகியில் "உத்ருஹ்ருணி யத்ரைக நச்வரா வர்ணா: ஸ்தாவரம் ரதி: ரக்ஷம் பரீக்ஷி தத்க்ஷி தேந வர்ண: வஸ்தாதவி ஸ்தாநத:" என்று பட்டாருளிச்செய்த ச்லோ

ஆநந்த ஷஷ்டிகளுக்கு உதயம்.

கத்தில் இது விசதம்.) ஆகவே, நமஸ்ஸானது கீழுள்ள ப்ரணவத்தோடே அந்வயித்து ஸ்வரூப விரோதியைக்கழிக்கின்றதென்றும், மேல * நாராயணயை வோடே அந்வயித்து உபேய விரோதியைக் கழிக்கின்றதென்றும் தன்னோடே மீண்டும் அந்வயித்து உபாய விரோதியைக் கழிக்கின்றதென்றும் சிக்ஷிக்கப் பட்டுள்ளது. விரோதிகள் உதிக்கையாலன்றோ அவற்றைக் கழிக்கவேண்டும் படியாய் நேர்ந்தது. போக்த்ருத்வ வ்யவஸாயியான ஜ்ஞாநம் மகாரத்தில் தோன்றியுள்ளது. அந்த மகாரத்தை விவரிப்பதும் நாராயண பதத்தின்மே லுள்ளதுமான சதுர்த்தியில் சொல்லப்படுகிற போகத்தில் ஸ்வஸம்யோஜநகர்த்ருத்வமான ஆனந்தம் உதிக்கிறது; அப்படி உதிக்கின்ற அந்த ஆனந்தத்தைத் தான் கீழுள்ள நம: பதம் கழிக்கின்றது. ஆகவே ஜீவகர்த்ருத்வ ஸாபேக்ஷமான போக்த்ருத்வமானது அந்த போகத்திலே ஸ்வாதந்த்ர்ய கல்மஷத்தின் உத்பத்தியை ஸஹித்துக்கொண்டிருந்து பிறகு அதைக் கழிக்கின்றதாக வுள்ளது.

இப்படியே லுப்த சதுர்த்தியில் சேஷத்வம் தோன்றியிருக்கச்செய்தேயும், தன்னைத் தானே காப்பாற்றிக்கொள்வதில் முயற்சி செய்தற்கு ஹேதுவான ஸ்வாதந்திரியத்தைக்காட்டுகிற ம: என்கிற ஷஷ்டி ஏற்பட்டு, அப்படிப்பட்ட ஸ்வாதந்திரியத்தை 'ந' என்று கழிக்கவேண்டியதாயிற்று. ஆகவே சேஷத்வமும் ஒரு விரோதியின் உத்பத்தியை ஸஹித்துக்கொண்டிருந்து பிறகு அதைக் கழிக்கின்றதாகவுள்ளது. அப்படியிருந்தாலென்ன? விரோதிகளைக் கழித்தாயிற்றே என்னக்கூடாது. அடியோடு விரோதியே ஏற்படாமலும் அதைக் கழிக்கவேண்டாமலும் இருக்கவேண்டுவதன்றோ முக்கியம். சேஷத்வ மாத்திரம் ஏற்பட்டால் ஒரு விரோதி யுண்டாகி அதனைப் பாரதந்திரிய வேஷத்தால் கழிக்கலாகிறது. போக்த்ருத்வம் மாத்திரம் ஏற்பட்டால் அதன்மேல் ஒரு விரோதியுண்டாகி அதனை போக்யதாவேஷத்தால் கழிக்கலாகிறது. பாரதந்த்ர்ய போக்யதைகள் ஏற்பட்டுவிட்டபின்பு இவற்றின்மேலும் ஏதாவது விரோதி ஏற்படுகிறதோவென்று பார்த்தால் ஒரு விரோதியும் உண்டாக வழியில்லை. ஆகவே சேஷத்வ போக்த்ருத்வங்கள் வடிக்கட்டவேண்டிய நிலைமையிலுள்ளன; பாரதந்திரிய போக்யதைகள் வடிக்கட்டியான நிலைமையில் உள்ளன. இதுகொண்டே இன்னது சிறந்ததென்பதை நாம் எளிதாகத் தெரிந்துகொள்ளலாமன்றோ?

[இங்கு நாம் இவ்வளவு விரித்துரைத்த அர்த்தங்கள்யாவும் விசதவாக் சிகாமணியான ஸ்ரீமணவாளமாமுனிகளின் வியாக்கியானத்தில் அதி கம்பீர ஸம்க்ஷிப்த ஸ்ரீஸூக்தியில் அடங்கியுள்ளன. அந்த வியாக்கியான ஸ்ரீஸூக்தி ரத்நத்தையும் இங்கே பதியவைக்கிறோம் —; "த்ருதீயாக்ஷரத்தில் 'மந - ஜ்ஞானே' என்கிற தாதுவிலே உதிதமாய் போக்த்ருத்வ ப்ரகாசகமான ஜ்ஞானத்தின் மேலேயிறே மகாரவிவரணமான சதுர்த்தியில் சொல்லப்படுகிற போ

23. முளைத்தெழுந்த ஸூர்யதுல்ய யாதாத்ம்யஜ்ஞாநம் விதியில்காணும் ஸ்வயம்ப்ரயோஜநதைகளைப் பகல்விளக்கும் மின்மினியுமாக்கும்

---

மத்தில் காகாக்ஷிந்யாயத்தாலே நமச் சப்தத்தால் கழிக்கப்படுகிற ஸ்வப்ரயோஜநக ஸ்வப்ரயோஜநமான ஆநந்தத்துக்கு உதயம். ப்ரதமாக்ஷரத்தில் சேஷத்வ வாசியான சதுர்த்தியின் மேலேயிறே நஞ்ஞாலே நிஷேதிக்கப்படுகிற ஸ்வரக்ஷணே ஸ்வப்ரவ்ருத்திஹேதுபூத ஸ்வாதந்த்ர்ய ப்ரகாசிகையான ஷஷ்டிக்கு உதயமென்கை. இத்தால், சேஷத்வ ப்ரகாசகமான சதுர்த்தியின்மேலே ஸ்வரக்ஷணஹேதுபூத ஸ்வாதந்த்ர்யவாசியான ஷஷ்டி உதிக்கையாலும், போக்த்ருத்வப்ரகாசகமான ஜ்ஞானத்தின்மேலே போகஸ்வாதந்த்ர்யவாசி மூலமான ஆனந்தம் உதிக்கையாலும் சேஷத்வ போக்த்ருத்வங்கள் ஸ்வவிரோத்யுதயாஸஹங்களாயிருக்கும்! நமஸ்ஸிலே பாரதந்திரியம் உதித்த பின்பு ஸ்வரக்ஷணே ஸ்வயத்நம் நிவ்ருத்தமாகையாலும் நமஸ்ஸ்வாதந்த்ர்யஹீநதையான பரசேஷதாப்ரதிபத்தியிலே ஈச்வரனுக்கு போக்யமாயிருக்கையே ஆத்மாவுக்கு வேஷமென்று தோன்றின பின்பு ஸ்வப்ரயோஜநம் நிவ்ருத்தமாகையாலும், பாரதந்த்ர்ய போக்யதைகள் ஸ்வவிரோத்யுதயாஸஹங்களன்று. ஆகையால் ஸ்வரூபவிரோத்யுதயாஸஹங்களான சேஷத்வ போக்த்ருத்வங்கள்போலன்றே அத்தை ஸஹியாதபடியிருக்கும் பாரதந்த்ரிய போக்யதைகள் என்றதாயிற்று.]

[இப்படி உத்க்ருஷ்டமான பாரதந்திரிய போக்யதைகளை ஆத்மாவுக்கு வடிவாக ஸாரஜ்ஞரான திருமந்திரநிஷ்டர் உணர்ந்தமையால் அவர்களுக்கு நைர்ப்பயேண ஸ்வயத்நநிவ்ருத்தி முண்டாயிற்று; இங்ஙனன்றியே கீழ்ப்படியான சேஷத்வ போக்த்ருத்வங்களை ஆத்மாவுக்கு வடிவாக சாஸ்த்ரிகள் உணர்ந்தமையாலே அவர்களுக்கு ஸ்வப்ரயத்நவிரதி முண்டாயிற்று—என்று நிகமித்துக்கொள்க.]

[ஸ்வரூபத்தின் உண்மையுணர்ச்சிநிலைமையில் தோற்றுகிற பாரதந்திரிய போக்யதைகள் ஸ்வரூப ஸாமாந்ய ஜ்ஞாநதசையில் தோற்றுகிற சேஷத்வ போக்த்ருத்வங்களைக் கீழ்ப்படுத்தும் விதம்.]

23. திருநெடுந்தாண்டகத்தில் "முளைத்தெழுந்த திங்கள்தானாய்" என்று எம்பெருமானை முளைத்தெழுந்த சந்திரனாகச் சொல்லியுள்ளது. அதன் கருத்து யாதெனில்; சந்திரனானவன் அற்புதமான ஆனந்தத்தை யுண்டாக்குமாபோலே ஸ்வரூப ஸாக்ஷாத்காரஜ்ஞாநமும் விலக்ஷணமான ஆனந்தத்தை உண்டாக்கும் தாதலால் அப்படிப்பட்ட ஞானத்தைத் திங்களாகக்கருதி, அந்த ஞானத்தை அளிக்குமவனான எம்பெருமானை ஸாமாநாதிகரண்ய ப்ரக்ரியையாலே சொல்லியிருக்கிறது. ஆகவே முளைத்தெழுந்த திங்களென்பது ஸ்வரூபஸாக்ஷாத்கார ஜ்ஞாநம். ஸ்ரீவிஷ்ணு புராணத்தில் பாராசரபகவான் "யதா ஸத்ய-ம்

24. நாலிலொன்று ப்ரவர்த்தகம், ஒன்று நிவர்த்தகம்.

---

யதா ஜ்ஞாநம்=யதா ஸூர்யஸ் ததா ஜ்ஞாநம்" என்று அந்த ஜ்ஞானத்தை ஸூர்யதுல்யமாகப் பணித்தான்; அகவிருளை அடியோடே ஒழிப்பதானதுபற்றி ஸூர்யனேடொக்கப் பேசப்பட்டது. ஆக, முளைத்தெழுந்த திங்களோடும் ஸூர்யனேடும் துல்யமான யாதொரு ஜ்ஞானமுண்டு - ஸ்வரூப ஸாக்ஷாத்கார ஜ்ஞானம்; அதனுடைய யாதாத்மிய சரமம் எதுவென்றால், ஸ்வரூப யாதாத்மிய வேஷமாக நிஷ்கர்ஷிக்கப்பட்டுக் கடைசியாகத் தேறின பாரதந்திரிய போக்யதைகள். இவையானவை, சாஸ்திரவிதிப்படியே ச்ரவணம் மனனம் முதலியவற்றால் காணப்படுகிற முதல்நிலைமையான சேஷத்வத்தையும் நடுநிலைமையான போக்த்ருத்வத்தையும் பகல்விளக்குப்போலே பயனற்றதாகவும் மின்மினி போலே அற்பமான வொளியையுடையதாகவும் பண்ணும்.

[இந்த சூர்ணிகையில் ப்ரதமம், மத்யமம், சரமம் என மூன்று பதங்கள் உள்ளன. திருமந்திரத்தில் முதல் அக்ஷரத்தில் லுப்தசதுர்த்தியிலே தோன்றின சேஷத்வம் ப்ரதமதசை என்பதனால் விவக்ஷிதம். பிறகு அந்த சேஷத்வத்திற்கு ஆச்ரயத்தைச் சொல்லுமதான மகாரத்தில் தோன்றின ஜ்ஞாத்ருத்வ ஸஹயாதமான ஹோக்த்ருத்வம் 'மத்யமதசை' என்பதனால் விவக்ஷிதம். அதற்குமேல் நமஃபத நாராயணுய பதங்களில் விளங்கின பாரதந்திரியமும் போக்யதையும் 'சரமம்' என்பதனால் விவக்ஷிதம்.]

[இந்த சூர்ணிகையினால் தேறினது ஏதென்னில்; - ஸ்வப்ரயத்ந லவலேசத்தையும் ஸ்வப்ரயோஜன லவலேசத்தையும் ஸஹியாதவையாய் எம்பெருமானுடைய போகத்திற்கு மிகவும் பாங்காயிருந்துகொண்டு ஸ்வரூபத்தை நிறம்பெறுவிக்கும் பாரதந்திரியமும் போக்யதையும் கீழ்ச்சொன்ன தன்மைகளில்லாத சேஷத்வத்தையும் போக்த்ருத்வத்தையும் கீழ்ப்படுத்தித் தாமே மேலாயிருக்குமென்றதாயிற்று.]

[கீழே ப்ரவ்ருத்திபரராகச் சொல்லப்பட்ட சாஸ்திரிகளுக்கும் நிவ்ருத்திபரராகச் சொல்லப்பட்ட ஸாரஜ்ஞர்களுக்கும் முறையே ப்ரவர்த்தக நிவர்த்தகங்கள் இன்னதென்கிறது.]

24. கீழே (19) "சாஸ்த்ரிகள் தெப்பக்கையரைப்போலே இரண்டையுமிடுக்கிப் பிறவிக்கடலீந்த, ஸாரஜ்ஞர் விட்டத்திலிருப்பாரைப்போலே இருகையும்விட்டு" என்று சாஸ்த்ரநிஷ்டர்களை ப்ரவ்ருத்திபரராகவும் திருமந்திர நிஷ்டர்களை நிவ்ருத்திபரராகவும் சொல்லியிருக்கிறதே, அதற்குக் காரணமேதென்னில்; சேஷத்வ போக்த்ருத்வங்கள் பாரதந்திரிய போக்யதைகள் என்கிற நான்கினுள் சேஷத்வ போக்த்ருத்வங்களே ஆத்மாவுக்கு ஸ்வரூபமென்று கண்ட சாஸ்த்ர நிஷ்டர்களை, போக்த்ருத்வமானது "போக்தாவானவன் போக்யவஸ்து கிடைப்பதற்கு முயற்சி செய்யவேண்டாவோ" என்னும் நினைவாலே போக்யபூதமான பகவத்விஷயத்தின் லாபத்திற்கு

25. முற்பாடர்க்கு க்ரியாங்கமானவை யிரண்டும் செயல்தீர்ந்தார் வ்ருத்தியில் ஸ்வநிர்பந்தமறுக்கும்.

---

உறுப்பான உபாயப்ரவ்ருத்தியிலே கொண்டு மூட்டும். பாரதந்திரிய போக்யதைகளையே ஸ்வரூபவுண்மைவடிவென்று கண்ட ஸாரஜ்ஞர்களாகிய திருமந்திர நிஷ்டர்களை போக்யதையானது "போக்தாவான எம்பெருமானன்றோ தனக்கு போக்யமான இவ்வாத்மவஸ்துவைப் பெறுகைக்கு முயற்சிபண்ணுவான் ; அப்பெருமானுக்கு போக்யமாயிருக்கு மிவ்வாத்மவஸ்துவுக்கு அவனைப் பெறுவதற்கான முயற்சிகளைச்செய்ய அதிகாரமில்லை" என்னும் நினைவாலே உபாய ப்ரவ்ருத்தியில் நின்றும் மீள்விக்கும்; (அதாவது) நிவ்ருத்தியிலே மூட்டும்.

[சேஷத்வ போக்த்ருத்வ பாரதந்திரிய போக்யதைகளாகிற நாலில் ஒன்றான போக்த்ருத்வமானது சாஸ்த்ரிகளை உபாயாநுஷ்டாநத்திலே ப்ரவர்த்திப்பிக்கும், போக்யதையாகிற மற்றொன்று ஸாரஜ்ஞரை உபாயாநுஷ்டாநத்தில் நின்றும் நிவர்த்திப்பிக்கும் என்றதாயிற்று.]

[திருமந்திர நிஷ்டர்களுக்கும் சேஷத்வ போக்த்ருத்வங்களுண் டாயினும் அவர்களுக்கு அவை செய்வது இன்னதென்பது.]

25. சாஸ்திரிகளென்று முற்படச் சொல்லப்பட்ட உபாஸகர்களுக்குக் கருமத்திற்கு அங்கமாக வுள்ள சேஷத்வ போக்த்ருத்வங்களிரண்டும், "செயல் தீரச்சிந்தித்து வாழ்வாரே வாழ்வார்" என்கிற திருமழிசைப்பிரானருளிச் செயலின்படியே "இவ்வாத்மா செய்யக்கடவதொன்று மில்லை, எம்பெருமானே நிர்வாஹகன்" என்று அநுஸந்தித்து உபாயாநுஷ்டானமாகிற ப்ரவ்ருத்தியில் நின்றும் நிவ்ருத்தரான ப்ரபந்நருடைய கைங்கரியமாகிற வ்ருத்தியில் எம்பெருமானுகப்பைப் பின்செல்லுமது தவிர, தம்முடைய நிர்ப்பந்தத்தைக் காட்டிக்கொள்ளமாட்டா. ["பரகதாதிசயாதாநேச்சயா உபாதேயத்வமேவ யஸ்ய ஸ்வரூபம் ஸ ஶேஷ:" என்கிறபடியே எதிர்த்தலைக்கு அதிசயத்தை விளைப்பதாகிற சேஷத்வம் தன்னுடைய அதிசயத்தில் விருப்பத்தாலே வரும் ஸ்வநிர்ப்பந்தத்தைத் தவிர்த்தே தீரும்.] இனி, போக்த்ருத்வம் ஸ்வநிர்ப்பந்தத்தைத் தவிர்ப்பது எங்ஙனேஎன்னில், திருமந்திரத்தின் ஸாரத்தை யுணர்ந்தவர்க்குப் பாரதந்திரிய போக்யதைகள் நன்கு கைவந்திருக்குமாகையாலே அப்படிப்பட்டவர்களுடைய போக்த்ருத்வம் தங்கள் ரஸத்திற்கு உறுப்பல்லாமல் எம்பெருமானுடைய ரஸத்திற்கே உறுப்பாயிருக்குமிறே. "ஆனந்தம் அவன்ப்ரீதியைத் துளிரேழுப்ப" என்று நம்பிள்ளை அருளிச்செய்வராம். அதாவது — சேதநனுடைய குணங்களிலே ஆனந்தமென்பதும் ஒரு குணமாகவுண்டே, அதை இல்லை செய்துவிட்டு போக்த்ருத்வ மன்றிக்கே போக்யதைமாத்திரமே வடிவு என்று சொல்லிவிடலாமோ வென்னில்; சேதநனுக்கு ஆனந்தகுணம் இல்லையென்று சொல்லிவிடுகிறோ மல்லோம்; அது உண்டு; எவ்விதமாக வுண்டென்னில், இவ்வாத்மாவை அநுபவிப்பதனாலே எம்பெருமானுக்கு விளைகின்ற மகிழ்ச்சியை

